எண் 204.

# சிவாலய தத்துவமும் கும்பாபிஷேக மகத்துவமும்




புள்ளிருக்குவேளூரென்னும் வைத்தீசுவரன்கோயில்

அஷ்டபந்தன சுவர்ணபந்தன மகா கும்பாபிஷேக

நினைவு மலர்.

14—9—1949




தருமபுர ஆதீனம்.

எண் 204.

27-5

உ

திருச்சிற்றம்பலம்

# சிவாலய தத்துவமும் :: கும்பாபிஷேக மகத்துவமும்

இஃது

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

25-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்

திருவுள்ளப்பாங்கின்படி

வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானத்தில்

கட்டளைவிசாரணை

ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளால்

வெளியிடப்பெற்றது.

1949.

27-5

உ

சிவமயம்

## முகவுரை

உலகம் ஆலயங்களின் அமைப்பு, வழிபாடு இவற்றைப்பற்றிய அடிப்படைத் தத்துவங்களை அறியாமையால் ஆலயங்களின் இன்றியமையாமையைப்பற்றி என்னென்னவோ எண்ணுகின்றது. ஆதலால் அவைகளின் அடிப்படைத்தத்துவங்கள் இந்நூலில் நன்கு விளக்கப்பெற்றுள்ளன.

கும்பாபிஷேகத்தின் முறையும், பயனும், நோக்கமும் இதில் குறிக்கப்பட்டுள்ளன. இன்றியமையாத தோத்திரப்பாடல்களும் இடம்பெற்றுள்ளன. உலகம் அறிந்து உய்யுமாக.

சோமசுந்தரத் தம்பிரான்,

கட்டளைவிசாரணை,

17-6

உ

குருபாதம்

# சிவாலய தத்துவமும் : : கும்பாபிஷேக மகத்துவமும்

உலகம் சித்துப் பிரபஞ்சம் அசித்துப் பிரபஞ்சம் என இருவகைப்படும். சித்துப்பிரபஞ்சம் உயிர்வருக்கம்; அசித்துப்பிரபஞ்சம் அவ்வுயிர்வருக்கம் வாழ்தற்கு இன்றியமையாதனவாகிய தநு, கரண, புவன, போகங்களாம். தநு-உடல்; காரணம்-கருவி; புவனம்-உலகம்; போகம்-அநுபவிக்கப் பெறும் பொருள்கள்.

உடல் முதலியவற்றின் வேருய், உடலிலிருந்து இந்திரியங்களைக்கொண்டு புலன்களை அறிவதாகிய உயிர்என்பது ஒன்று உண்டு என்பதைப் பலரும் ஒப்புவர். எங்ஙனமெனின், உயிர் உடலைவிட்டு நீங்கியபிறகு தன்னைச் சுடுவதையாவது புதைப்பதையாவது உடல் அறியாமையினுலும், பிராணவாயு இயங்கிக்கொண் டிருக்கும்போதும் நித்திரையில் தன்னை ஒருவன் வாழ்த்துவதையாவது வைவதையாவது அறியாமையினுலும் உடல், பிராணவாயு முதலியவைகளுக்கு வேருக இவ்வுடலிலிருந்து இன்பத்துன்பத்தை அறிவது ஒன்று உளது எனக்கொள்ளக்கிடத்தலின். ஆயினும் உயிரின் சிறப்பியல்பு பொதுவியல்புகளை உள்ளவாறு உணர்வார் சிலரேயாம்.

அவ்வுயிர் ஓரறிவுயிர்முதலாக ஆறறிஉயிர் ஈருக அறு வகைப்படும். ஓரறிவுயிர் மரம் செடி கொடி முதலிய தாவரங் களாம்; அவையும் இன்பத்தை விரும்புகின்றன துன் பத்தை வெறுக்கின்றன என்பதை விஞ்ஞானிகள் கருவி கொண்டு விளக்கியுள்ளனர். அங்ஙனமாக, ஆருவதாகிய பகுத்தறிவினையுடையமக்கள் இன்பத்தையே விரும்புகிருர் கள் துன்பத்தை வெறுக்கிருர்கள் என்பதைக் கூறல் வேண்டா. அங்ஙனம் விரும்புவதோடன்றி அதனைப்பெற முயற்சியும் செய்கின்றனர். ஆயினும் இன்பத்துன்பங்களை மாறிமாறி அநுபவிக்கின்றனர். தாங்கள் விரும்பாத துன் பத்தையும் அநுபவிப்பதற்குக் காரணம்வேண்டும். காரண மில்லாமல் ஒரு காரியமும் இவ்வுலகில் நிகழ்தற்கில்லை.

நல்லவர்பலர் வறுமை வியாதிகளால் துன்புறவும் அல் லாதார் பலர் இன்புறவும் காண்கிறோம்; அறநெறிச்சார நூலுடையார் "இப்போது அநுபவிக்கும் இன்பத்துன்பங் களைக்கொண்டு முற்பிறப்பிற்செய்த நல்வினை தீவினை களை அறிக. இப்போது செய்யும் நல்வினை தீவினைகளைக் கொண்டு மறுபிறப்பில் அநுபவிக்கும் இன்பதுன்பங்களை அறிக" என்கிருர். ஒருதாரணங்கூறியும் விளக்குவாம்; நாம் இவ்வருடம் புசிப்பது சென்ற வருடம் விளைவித்தது. இவ்வருடம் விளைவிப்பது அடுத்தவருடத்திற்குணவாவது. அன்றியும் ஒரு நிலத்தை இருவர் பங்கிட்டுக்கொள்ளுகிருர் கள். ஒருவருக்கு நன்கு விளைகிறது; மற்றவருக்கு விளைவு குறைகிறது; இருவரும் முயற்சிசெய்தவர்களே. ஒருவன்தன் பிள்ளைகளைச் சமமாகப்பாவித்துத் தன்னிடமிருந்த பொருள் களைச் சமமாகப் பங்கிட்டுக்கொடுக்கிருன். ஒருவன்விருத்தி

பண்ணுகிறான். ஒருவன் இழந்துவிட்டுப் பிச்சைஎடுக்கிறான். பிச்சைஎடுக்க வேண்டுமென்ற எண்ணமாவது விருப்பமாவது அவனுக்குண்டா?

இன்னமும் சிலநாட்களுக்குமுன் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று கூறி முடிப்பாம். சில வருடங்களுக்குமுன் தஞ்சையில் பிள்ளைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ரொட்டிவிற்கும் சிறுவன் ஒரு ஆலமரத்தின் நிழலில் தங்கி வேடிக்கைபார்த்தான். வான ஊர்தியிற் பழகிய இருவர் அவ்வாலமரத்திற்கு மேலேபறந்தபோது கருவியைச் செலுத்த இயலாதவராயினர். ஊர்தி கீழேவிழுந்தது. சிறுவன் பலியானான். ஊர்தியிலிருந்த இருவரும் தப்பினர். இங்ஙனமாக நிகழ்வனபல; இவ்வளவும் விரித்துக்கூறியது இவ்வுடல் 'வினையின் வந்தது; வினைக்கு விளைவாயது' என்பதை நம்மவரிற் பலர் உணராமைகருதியேயாம். அங்ஙனம் உள்ளவாறுணராமையாலேயே, இருபெரு உலகமகாயுத்தம் நடந்தன. அளவில்லா தஉயிரும், கலங்களும்,பொருள்களும், அழிந்தன. இன்னமும் யுத்தப்புகைச்சல் தணிந்தபாடில்லை.

கடவுளும், புண்ணியபாவமும், சுவர்க்கநரகமும் உண்டென்னும் உண்மையையும், இந்தச்சரீரம் நமக்குக் கிடைத்தது நாம்கடவுளைவணங்கி முத்தியின்பம் பெறும்பொருட்டேயாம் என்னும் நீதியையும் மக்கள் உறுதியாகக் கொண்டாலல்லாமல் விஞ்ஞானத்துறையின் வளர்ச்சி ஆக்கப்பாட்டிற்குத் துணைசெய்வதுபோலத் தோன்றி அழிவுபாட்டிற்கே காரணமாகும் என்பது ஒருதலை. இதனை மக்கள் உள்ளவாறு உணராமைக்குக் காரணம் அநாதியே பந்தித்

திருப்பதாகிய ஆணவமலம் என்க. இவ் ஆணவமலம் காரிய வேறுபாட்டால் மோகம், மதம், அராகம், கவலே, தாபம், வாட்டம், விசித்திரம் என எழுவகைப்படும். அவற்றுள் மோகமாவது கொள்ளத்தக்கது இது, தள்ளத்தக்கது இது என நூல்களைப்படித்து உணர்ந்திருந்த போதிலும் விடயங்களில் மயங்குதற்குரியது.

உயிர்களை அநாதியே பந்தித்திருப்பதாகிய இவ்வாணவ மல நீக்கத்தின் பொருட்டே, தநு, கரண, புவன, போகங்களாய் விரிந்த மாயையும், இன்பதுன்பத்தையும் அநுபவிக்கும்போது செய்யும் நல்வினை தீவினையாகிய கன்மமும் ஆக இரண்டு மலங்களையும் கடவுள் தந்தனர். வண்ணான் துணியிலுள்ள அழுக்கைப்போக்க, சாணம் உவர்மண் முதலியவைகளைச் சேர்ப்பது போல; அரசனால் தண்டிக்கப்பட்ட ஒரு குற்றவாளிக்குத் தக்கபடி உடை, வேலை, இருக்க இடம், கருவி வேண்டியிருப்பதுபோல, ஆணவமலமாகிய அறியாமையினால் வினைகளைச் செய்த உயிர்களுக்கு முழுமுதற்கடவுளாகிய அரசனால் உடல் முதலியன உதவப்பட்டன என்பதையும் ஒருவாறு யூகித்தறிந்துகொள்க.

கூலிவேலை செய்யும் ஒருவனுக்குத் தான்செய்த வேலைக்குத் தக்க கூலி இவ்வளவு என்பதுந் தெரியாது. கூலியும் அவனை அடையாது; அங்ஙனமே, அறியாமை பொருந்திய உயிரும் தன் வினைக்குத் தக்க உடலை எடுக்க அறியாது; உடலும் சடம்; தானே உயிரை யடையாது ஆதலின் உயிர்கள் செய்யும் வினைக்கேற்ப உடல் கருவி

முதலியவற்றைப் பொருத்தும் கடவுள் ஒருவர் உண்டு எனக்கொள்க.

உயிர்களோ அளவில்லாதன; அவை வசிக்கும் உலகம் பல; செய்யும் வினைக்குத் தக்க பிறப்போபல; அநுபவிக்கும் போகமோ பல; ஆகையினுல் கடவுள் எங்கும் நிறைந்தவராய், என்றும் உள்ளவராய், எல்லாம் அறிபவராய் எல்லாம் வல்லவராயிருத்தல் வேண்டும். கடவுள் என்னுஞ் சொல் கடத்தல் எனப்பொருள்படும். ஆதலால் கடவுள் மனம், மொழி, மெய்களைக் கடந்தவர் என்பதுபொருள்.

மனம், மொழி, மெய்களைக் கடந்த ஒரு பொருள் உண்டென்று எப்படி நம்புவது? என்கிருர்கள் சிலர். ஒருவன் மற்ருெருவனைத் தந்தை என்கிருன். எப்படி அறிந்தான்? தாய்சொல்லக் கேட்டறிந்தான். உலகத்தில் பார்த்தும் அநுபவத்தினுலும் உறுதிப்படுத்துகிருன். அங்ஙனமே கடவுளை அறிந்தவர்கள் சொல்லியிருக்கிருர்கள்; நாமும் அவ்வழியைப் பின்பற்றினுல், அப்பெருமானைக் காணமுடியும். விவேகாநந்தர் தன் குருவாகிய இராம கிருஷ்ண பரமஹம்சரைக் கண்டு 'கடவுளைக் கண்டதுண்டா? காட்ட முடியுமா? என்ருர். 'ஆகா கண்டேன்; காட்டுவேன்; காண்பது இந்தக்கண்ணுல் அன்று' என்று கூறிக் காணுதற்கு வழியும் கூறினுர். அவ்வழியே விவேகாநந்தர் பின்பற்றிக் கடவுளைக் கண்டு உலகத்தவர்க்கும் போதித்தார். எம்மினும் அறிவிற் சிறந்தார் இலர் என இறுமாந்த மேனுட்டவர் பலர் அவருக்குச் சீடாாயினர். எச்சின் மயங்கும்படி உனக்கு இப்பால் தந்தாரைக் காட்டென்ற தந்தையாகிய சிவபாத ஹிருதயருக்கு ஞான

சம்பந்தப் பெருமான் அடையாளங்களுடன் சாற்றினர்களெனத் தேவாரத் தமிழ் மறையினல் அறிகிறோம். இங்ஙனமாக அவர்கள் கண்டு கூறியது பதிஞானம் எனப்படும் சி.வஞானத்தால். விளக்கினைக்கொண்டு ஏகதேசம் சில பொருள்களை யறிகிறோம். எந்த விளக்கையுங்கொண்டு சூரியனைக் காணமுடியாது. சூரிய ஒளியாலேயே காணுதல் வேண்டும். முழுமுதற் கடவுளாகிய அப்பதியையும் அப்பதி ஞானத்தினுலேயே அறியவேண்டும். நூலறிவினுல் அறிய முடியாது.

நூலறிவைக்கொண்டே அறிந்த ஒருபொருள் பிரித்துணரவாராமைக்கு ஒருதாரணங் கூறுவாம். நீரில் மீன் முதலியன சஞ்சரிக்கின்றன; அதனுல் இடைவெளியுண்டு; இடைவெளி யுண்டானுல் நிழல் உண்டு; அந்நிழல் வெளிப்படாது நீரின்கண் விரவி நிற்கின்றது. (சிவஞா. 8-ம்சூ 5-வது வெண்பா) சிவசைதன்யமும் ஆன்மசைதன்னியத்தோடுவிரவிப் பிரித்துணர முடியாதபடி நிற்கின்றது என்றுணர்க. இவைகளெல்லாம் முறையே தீட்சைபெற்று ஞானநூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து அநுபவத்தில் அறியவேண்டியன.

இதுவரை கூறியவைகளைக்கொண்டு பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்டு என்பதை ஒருவாறு உணரலாம்.

பதி தனது முற்றுணர்வினுல் எல்லாம் அறிந்து உயிர்க்கு அறிவிப்பது; பதி அறிவித்தால் அறிந்து நிற்பது பசு; பாசம் அசைத்தால் அசைவது சடம் ஆதலின்,

கடவுள் வழிபாடு உலகத்தில் பலராலும் போற்றப்படுகிறது. மிகப்பூர்வ குடிகளாய்க் காட்டிலும்மலையிலும் வசிப்பவர்கள் கூடக் கடவுள் வழிபாடுஏதாவது ஒரு முறையில் இயற்று கிறார்கள். பயத்துடனும்பத்தியுடனும்,நியமமாகவும் இயற்று கிறார்கள். கடவுள் இல்லையென்பாருங்கூடத் தங்கள் தலைவர் படங்களை வைத்து அலங்கரித்துப் போற்றுகிறார்கள். அதுவும் ஒருவித வழிபாடே. எங்கும் நிறைந்த கடவுள் அதனையும் ஏற்று அவர்கள் சித்தசுத்திக்கு ஏற்ற பலனளிப்பர்.

## கடவுள் வழிபாட்டின் அவசியம்

செய்ந்நன்றி மறத்தலைக் காட்டிலும் கொடிய பாவம் இல்லை என்பதனை எல்லோரும் ஒப்புவர். இருளில் கிடந்த ஒருவனுக்கு விளக்கு ஒளி காட்டியுதவியதுபோல, ஆண மலபந்தத்தினால் அறிவு இச்சை செயல்கள் விளங்காமற் கிடந்த உயிர்களுக்கு உடல், கருவி, உலகம் முதலியவற் றைச்சிருட்டித்துக் கொடுத்த கடவுளைச் செய்ந்நன்றி யறித லாக வழிபடவேண்டுவது அவசியமாம்.

கடவுள் வழிபாட்டின் தத்துவம் உணராத சிலர் கூறுவதாவது:- உலகம் முழுவதிலும் மக்கள் அடிமை வாழ்வை வெறுக்கிறார்கள். சுயேச்சையை விரும்புகிறார் கள்: விஞ்ஞானத்தால் தங்களுக்கு வேண்டியவற்றை வேண்டியாங்கு எய்துகிறார்கள். அங்ஙனமிருக்கக் கடவு ளுக்கு நம்மை அடிமை என்பது அஞ்ஞானத்தினால் என்பது;

விஞ்ஞானத்தை அடிமைப் படுத்தினர்களா? விஞ்ஞானத்திற்கு அடிமையானர்களா? என்பது கிடக்கட்டும். விஞ்ஞானிகள் எல்லோரும் அப்படிச் சொல்லுகிருர்கள் என்பதுமில்லே. அடிமைவாழ்வை வெறுப்பவர்கள் தங்களுக்குத் தலேவராயிருந்து அவ்வியக்கத்தை நடத்தும் ஒருவரைப் போற்றத்தான் செய்கிருர்கள். அங்ஙனமே ஆணவமல பந்தத்திலிருந்து விடுபடுவதற்குத் துணேபுரிந்து உயிர்க்குயிராய் நிற்கும் அக்கடவுளே வழிபடுவதும் போற்றத்தக்கதே. அன்பொத்த நாயகன் நாயகி இருவர் கூட்டத்திலும் நாயகி தன்னே அடிமையாகப் பாவிப்பதே சிற்றின்ப நுகர்ச்சி மீதூர்தலுக்கு ஏதுவாகும். அங்ஙனமே உலக நாயகனுகிய கடவுளுக்கு ஆன்மா அடிமையாயிருத்தலே பேரின்ப நுகர்ச்சி மேன்மேலும் பெருகுவதற்கு ஏது என்க. நாயகி அடிமை என்பதை ஒருவன் ஒருத்தியை மணம் செய்துகொண்டான் என்பது வழக்கே யன்றி ஒருத்தி ஒருவனே மணஞ்செய்து கொண்டாள் என்னும் வழக்கின்மையாலும் அறிக.

இனி கடவுளுக்கு உரு அமைத்து வழிபட்டார்கள் சிலர்; அருவுரு அமைத்து வழிபட்டார்கள் சிலர்; அருவமாக வழிபட்டார்கள் ஒருசிலர். இம் மூவகை வழிபாட்டையும் படிமுறையாகக் கொண்டு அங்கு இங்கு எனுதபடி எங்கும் நிறைந்த ஆனந்தவடிவாக வழிபட்டார் சிலர். அங்ஙனம் வழிபட்டவர்கள் சைவசித்தாந்திகளாவர். சிவ சம்பந்தம் சைவம். சிவன் என்பதற்குப் பேரின்பவடிவினன் என்பது பொருள். சிவம்-மங்களம்; மங்களத்தைச் செய்பவன் சிவன் என்பதும் ஆம். முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானது திருவடி நிழலாகிய பேரின்பத்தை நுகர்தற்குச்

சைவசமயத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு படிகள் வகுக்கப்பட்டுள்ளன.

**சரியையாவது:—** அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் உயிர்கள் படிப் படியாகத்தன்னை யுணர்ந்து உய்தற் பொருட்டுக் கொண்ட தூலவடிவுமாத்திரத்தைப் பொருளென்றுணர்ந்து சரீரத் தொழில் மாத்திரையால் நூல்களில் விதித்தவாறு வழி படுதலாம்.

**கிரியையாவது:—** அவ்வாறு வழிபட்டுவர நிகழும் பக்குவ விசேடத்தால் நுண்ணுணர்வு கைகூடப்பெற்று சகல நிட்களமாகிய சூக்கும வடிவே பொருள் முற்கூறிய சகளம் அதனைவழிபடுதற் கிடம் என உணர்ந்து புறத் தொழிலாலும் அகத்தொழிலாலும் வழிபடுவது.

**யோகமாவது:—** அவ்வாறு வழிபட்டுவர நிகழும் பக்குவ விசேடத்தால் அதிநுட்ப உணர்வுடையராய் நிட் களமாகிய அதிசூக்குமவடிவே பொருள் முன்னைய இரண் டும் அதனைவழிபடுதற்கிடம் என உணர்ந்து அகத்தொழில் மாத்திரையான் விதித்தவாறு வழிபடுவது.

**ஞானமாவது:—** அவ்வாறு வழிபட்டுவர நிகழும் பக்குவமுதிர்ச்சியால் உள்ளவாறு உணர்வு விளங்கப்பெற்று எங்கும் நிறைந்த சச்சிதானந்தமே சொரூபம்; முற்கூறிய மூன்றும் அதனை உணர்தற்கும் வழிபடுதற்கும் கொண்ட திருமேனி என்றுணர்ந்து, கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடுதலாகிய அறிவுத் தொழில் மாத்திரையால் வழிபடுதலாகும்.

இச்சரியை முதலிய நான்கும் அரும்பு, மலர், காய், கனி ஆதல்போல படிமுறையாகிய தம்முள்வேறுபாட்டால் முறையே ஒன்றற்கொன்று அதிகமாம் ஆதலான் உருவ வழிபாடு அவசியம் என்பது. அஃதின்றி மேற்படியையடைய விரும்புவோர் படிவழிசெல்லாது தாவிமேற்படியையடைய விரும்புவாரை ஒத்துப் பயன் பெறுதொழிவார்.

ஆலயவழிபாடு:— முழுமுதற்கடவுள் ஒருவர் உண்டு; அவர் சிவபெருமானே. அவரை வழிபடுதல் வேண்டும் என்பன ஒக்கும். ஆலயத்தில் வழிபடுவானேன்? வீட்டில் வழிபடுதல் அமையாதோ எனின், அதுவும் வேண்டற்பாலதேயாயினும் ஆலயங்களில் மனம் ஒருப்பட்டு நிற்பது போலப் பிறவிடங்களில் நில்லாது கடல் அலைபோல சுகமும் துக்கமும் மாறி மாறி நிகழ்தலின் உற்றார், உறவினர், மனைவி, மக்கள் முதலியோரைக்காணின் மனம் ஒருவழி நில்லாதோடும். மேலும் ஆலயங்களில் உள்ள உருவங்களில் மந்திரம், பாவனை கிரியை முதலியவைகளால் தயிரில் நெய் போல் கடவுள்விளங்கித்தோன்றுவர். வீடுமுதலியவைகளில் விளங்கித்தோன்றார். ஆலயம் என்னும் சொல்லுக்குப் பொருள் எல்லாம் ஒடுங்குமிடம் என்பது. இதனாலும் ஆலயங்களில் வழிபடுவதே சிறந்தது என்றுணர்க. இஃது அன்றியும் ஆலயத்தில் ஒவ்வொரு உறுப்பும் தனித்தனி சைவசமயக் கொள்கையை விளக்குவதாகும்.

### சிவாலயதத்துவம்

ஆலய அமைப்பு இரண்டு விதம். ஒன்று சரீர அமைப்பை ஒட்டியது; மற்றொன்று இருதயகமலஅமைப்பை ஒட்டியது. சத்த தாதுக்களின் நிலைமை முதலியவற்றை

முன்னதாலும் உள்ளத்தின்கண் சொல்லாயும் பொருளாயும் அமைந்துள்ள ஒவ்வொரு பொருளேயும் பற்றிப் பின்னதாலும் அறியலாம்.

சிவாலயங்களில் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், ஸ்நபனமண்டபம் (நீராட்டுமண்டபம்), தம்ப மண்டபம், நிருத்தமண்டபம் முதலியனவும், ஐந்து அல்லது மூன்று பிராகாரங்களும், கோபுரம், யாகசாலை, நந்தி, பலிபீடம், துவஜஸ்தம்பம் முதலியவைகளும் முக்கியமாகக் காணப்படுவனவாகும்.

தேகமாகிய ஆலயத்துள்ளும் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என ஆறு ஆதாரங்களும் அறியப்படும். மற்றெருருவகை-உடலில் தலை, கழுத்து, மார்பு, நாபி, பாதம் என ஐந்து பிரிவுகள் உள்ளன. சிவாலயங்களில் கர்ப்பக்கிருகம் தலை; அர்த்த மண்டபம் கழுத்து; மகாமண்ட்பம் மார்பு; யாகசாலை நாபி; கோபுரம் பாதம் ஆகும்.

இவ்வுடலில் அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆநந்தமய கோசம் என ஐந்து கோசங்கள் உள்ளன. கோசம்-சட்டை. கோயிலிலுள்ள ஐந்துபிராகாரங்களும் இவற்றைக் குறிக்கின்றன. அன்னமயகோசம் முதலியவற்றைத் தூலசரீரம், சூக்குமசரீரம், குணசரீரம், கஞ்சுகசரீரம், காரண சரீரம், என அறிக.

ஐந்து பிராகாரங்களை நிவர்த்தி முதலிய ஐந்துகலை களாகவும் கூறுப. இவைகள் எல்லாம் உண்மைநூல்களை முறையாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளத்தக்கனவே யல்லாமல் தாமாகப் படித்துத் தெரிந்து கொள்ளத்தக்கன அல்ல ஆதலின் சுருக்கமாகக் கூறப்பட்டன என அறிக.

இனி, இருதய அமைப்பை ஒட்டி ஆராய்வாம். இருதயத்தில் கீழ்நோக்கிய தாமரைமொட்டு வடிவான மாமிசபிண்டம் ஒன்றிருக்கிறது. அதன் நடுவில் அங்குட்டப் பிரமாணமுள்ள இடைவெளி யிருக்கிறது. அது தகராலயம் எனப்படும். யோகிகள் தியானிப்பது இச் சபையிலே.

சிவாலயத்திலுள்ள தூபியும் இருதய கமலாகாரமாகத் தியானிக்கப்படும். விரிந்த நூல்களிற் கண்டுகொள்க.

இனி, இவ்வான்மா இச் சரீரத்தில் சாக்கிரம், சொப் பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்தவத்தைப் படும். சாக்கிரம்—நனவு; சொப்பனம்—கனவு; சுழுத்தி—தூக்கம்; துரியம்—பேருறக்கம்; துரியாதீதம்-உயிர்ப்படங்கு நிலை. நனவு கனவு உறக்கமேயல்லாமல், ஒருவன் நன்றாத் தூங்கினேன் என்று சொல்வதைக்கொண்டு பேருறக்க நிலையும், ஒருசிலர் நன்றாய்த் தூங்கும்போது ஒன்று இரண்டு நிமிடம் சுவாசிப்பதையும் விட்டிருந்து பிறகு பெருமூச்சு விடுதலைக்கொண்டு உயிர்ப்பு அடங்குநிலையும் உண்டெனக் கொள்க. ஆலயங்களிலும் அவ்வண்ணமே மூலஸ்தானத் திலிருந்து வெளிவந்து வீதியுலாப்போந்து மூலஸ்தானத்தை யடைவதையும் கண்டுகொள்க.

சிவாலயங்களில் இலிங்கம், நந்தி, பலிபீடம் மூன்றுள்ளன. அவை பதி, பசு, பாசம் மூன்றையுங் குறிப்பன. சிவாலயம் முழுவதும் தேவதாசொரூபமேயாகும். சிவ பெருமான் தான் ஒருவரேயாயிருந்தும், ஆன்மாக்களுக்கு நிக்கிரகம், அநுக்கிரகம் செய்யும்பொருட்டுச் சாந்தமும் கோரமுமாகிய பல வடிவங்களைக் கொண்டருளுவர்; அவ் வடிவங்களே ஆலயங்களில் பூசிக்கப்படும்மூர்த்திகளாகும்.

சிவபெருமான் ஆன்மாக்களின் பொருட்டுச் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் ஆகிய பஞ்ச கிருத்தியங்களும் செய்தருளுவர். இப் பஞ்சகிருத்தியம் நித்திய பஞ்சகிருத்தியம், மகா பஞ்சகிருத்தியம் என இரு வகைப்படும். பூத பரிணாமமாகிய தூல உடம்பைக்கொடுத் தலும், பிராரத்தகன்மம் புசித்துத் தொலைக்கும்வரை தூல உடம்பை நிறுத்துதலும், தூல உடம்புகளைச் சங்கரித் தலும், கர்மத்தை உருசிப்பித்து ஆணவவலியையடக்கலும், தனது திருவடி நிழலில் இருந்து பேரின்பத்தை அநு பவிக்கச் செய்தலும் நித்திய பஞ்ச கிருத்தியமாம்.

இனி, மாயையிலிருந்து தநு, கரண, புவன, போகங் களைத் தோற்றுவித்தலும், தோற்றுவிக்கப்பட்டவைகளைப் புசிப்புக்காலம்வரை நிலை நிறுத்தலும், அவற்றைத் தத்தம் காரணத்திலொடுக்குதலும், பக்குவம் வரும் அளவும் கன் மங்களைப் புசிப்பித்தலும், பக்குவ ஆன்மாக்களுக்குத் தீட்சைசெய்து பாசத்தை அழித்துத் திருவடி நிழலிற் சேர்த்தலும் முறையே மகா பஞ்சகிருத்தியமாம்.

சிவாலயங்களில் நடைபெறும் நித்திய பூசைகளும் திரு விழாக்களும் இவ் விருவகைப் பஞ்சகிருத்தியங்களை உணர்த் துவனவாகும்.

நித்தியபூசை:—நாடோறும் நடைபெறும் அபிடேகம் கௌதுகபந்தனம், தூபம், தீபம், கற்பூரதீபம் இவை நித்திய பஞ்சகிருத்தியத்தை உணர்த்துவன. இங்ஙனமின்றி அபி டேகம், நைவேத்தியம், நீராஞ்சனம், பலி, பலிநாயகர் எழுந் தருளுதல் இவற்றை நித்திய பூசையில் பஞ்சகிருத்தியம் என்பாரும் உளர்.

பிரதக்ஷிணம் செய்வது சிவ வியாபகம் ஆன்மாவில் விளங்குதற்பொருட்டேயாம்; நமஸ்காரம் செய்வது சிவ பெருமானது அடிமையாய் அவருடன் அத்துவிதமுற்று நிற்றலைக் குறிப்பது; முரசு முதலியன இசைத்தலும் ஓர் உண்மையினை விளக்குவதாகும். அதாவது:—

சிவயோகிகள் சரீரத்திலுள்ள அசுத்தவாயுவைக் கழித்து, புறத்தேயுள்ள சுத்தவாயுவைப் பூரித்துப் பிராண வாயுவைக் கும்பித்து, மூலாக்கினியை மூட்டிக் குண்டலி சத்தியை எழுப்பி, ஆறு ஆதாரங்களையும், ஆங்காங்குள்ள தேவதைகளையும் பிரணவ தியானத்துடன் தரிசித்து, அவ் வாதாரங்களுக்கு மேலாய் விளங்கும் பிரமரந்திரத்தில் உள்ள சந்திரமண்டலத்தை இளகச்செய்து, அமிர்தத்தை நாடிகளில் நிரப்ப, சதங்கையோசை சிலம்பு ஓசை கண்டா மணி ஓசை முதலிய தசநாதங்களும் தோன்றும் என்பதை உணர்த்தும் பொருட்டேயாம்.

ஆலயங்களில் நடைபெறும் சோடச உபசாரங்களின் சிலவற்றின் கருத்துக்களை விளக்குவாம். ஆவாகனம் சிவ பெருமானுடைய பரிபூரண ஞானப்பிரகாசத்தை அறிந்து அழுந்துதல். தாபனம் அவ்வழுத்தத்தில் நிலைபேருகப் பொருந்துதல். சந்நிதானம், ஆன்மாவின் அறிவு சிவபூர ணத்திலும் சிவபூரணத்துவம் ஆன்மாவின் அறிவிலும் ஒன்றி அந்யோந்யமாயிருத்தல். சந்நிரோதனம் அவ் வாறே எக்காலத்திலும் நீக்கமின்றியிருத்தல். பாத்தியம் சிவபெருமானது திருவடிகளிற் சேருதல். ஆசமனம் சத்திகளின் விளக்கத்திலே திருவருளாகிய திருமுகத்தில் பொருந்துதல். அர்க்கியம் திருமுகம் என்னும் அருளைத் திருமுடியிற் பொருத்துதல். புட்பதானம் மனமாகிய புட்பக்குடலையில் ஞான அட்ட புட்பங்களாகிற கொல் லாமை, வாய்மை, பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, தவம், அன்பு என்னும் எட்டுவித மலர்களையும் நிறைத்துச் சாத்துதல். தூபம் அறியாமையை நெருப்பில் இட்டுப் புகைத்தல். தீபம் ஞானப் பிரகாசத்தை ஏற்றுதல். நைவேத் தியமும் முகவாசமும், ஆணவாதி காரியங்களைப் பலிகொடுத் தலாம். இங்ஙனமே மற்றவைகளின் உண்மைப் பொருள் களையும் ஓர்ந்து அறிந்துகொள்க. தீபம் பலவற்றுள்ளும் கர்ப்பூரதீபம் சிறந்தது. கர்ப்பூரம், அக்கினிபற்றியவிடத் துச் சிறிதும் மிச்சமின்றி அக்கினியிற் கரைந்துபோகும். அதுபோல் ஆன்மாவும் சிவஞானக்கினி பற்றியவிடத்துப் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவமுறுதலை விளக்குவது.

நைமித்திய பூசை எனப்படும் திருவிழாக்களும் ஒவ்வொரு பொருள் குறித்தனவேயாம்.

துவஜாரோகணம்: கொடியேற்றுவிழா – செங்கோல் அரசன் கொடி ஏறியவழி கொடுங்கோலரசன் வலி ஒழிந்து செயலழிந்து ஒழியக் குடிகள் க்ஷேமம் அடைதல் அநுபவ உண்மை. அதுபோல மும்மல பந்தமுற்றுப் பிறந்திறந்து உழன்று வருந்தும் உயிர்கள் தீட்சை பெற்றுப் பஞ்சாட்சரத்தை விதிப்படி உச்சரித்து, பராசத்தியையும் சிவத்தையும் இருதயத்திலே வைத்துத் தியானித்து, தன்னிடத்தில் அநாதியே தோன்றுமல் நிற்கும் திருவருளினுல் அறிவே தாரகமாக நிறுத்த, பரையாகிய கொடி ஏறிச் சிவத்தை இரண்டறக் கலப்பித்தலால், ஆணவமல அரசு வலியிழந்து செயலழிந்து ஒடுங்க, ஆன்மா பேரானந்தப் பெருவாழ்வடையும். ஆகவே பாசநீக்கத்திற்கும் வீடுபேற்றிற்கும் திருவருளாகிய கொடி ஏறவேண்டும் என்பதை அறிவிக்கும் குறியாகும்.

பெரும்பாலும் திருவிழாக்கள் பத்துத்தினம் நடைபெறும். அவைகளில், துவஜாரோகணம் சிருட்டி; வாகனதி உற்சவங்கள் திதி; சூரஞேற்சவம் இரதோற்சவம் சங்காரம்; மௌஞேற்சவம் திரோபவம்; தீர்த்தோற்சவம் அநுக்கிரகம்.

இஃதன்றியும் ஒவ்வொரு நாளும் நடைபெறும் உற்சவங்களும் தனித்தனியே ஒவ்வொரு பொருள் குறிக்கும் எனவும், ஒவ்வொருநாளும் வெளிவரும் வாகனங்களும் ஒவ்வொரு பொருள் குறிக்கும் எனவும் கூறுப. விரிந்த நூல்களிற் கண்டுகொள்க. அவற்றுள் இடபவாகன ஆரோகணக் காட்சியும் தேர்த்திருவிழாவும் சிறந்தனவாகும்.

## இடபவாகனக்காட்சி

சிவபெருமான் அடியார்களுக்குக் காட்சி வழங்கும் போது இடபவாகனரூடராகவே காட்சிவழங்குகிறார். இடபம் எவ்வகையான மாசும் அற்றது. சுத்த வெள்ளை நிறமுடையது. சமம் முதலிய நான்கு குணங்களைக் கால்களாகவுடையது. ஆணவ மலத்தை ஒழித்து அறிவைப் பணிவுடன் ஏற்றுநிற்கிறது. ஆன்மாக்கள் இங்ஙனம் ஆகும்போதுதான் இறைவன் பேரருள் சுரக்கின்றான். ஆகையால் இக்காட்சி அநுக்கிரகக் காட்சியாகும். எனவே இது மிகச் சிறந்ததாகும்.

## இரதக்காட்சி

தேவர்கள் வேண்டுகோளின்படி பூமி, சூரியன், சந்திரன் முதலியவர்களையே தேராகவும் உபகரணங்களாகவும் கொண்டு சிவபெருமான் திரிபுரத்தசுரர்களை வதைக்கச் சென்றகாலத்து அத்தேவர்கள் தங்களால்தாம் சிவபெருமான் வெற்றிபெறப் போகிறார் என எண்ணியபோது உயிர்க்குயிராகிய சிவபெருமான் அதனை யுணர்ந்து அவர்கள் உதவியின்றிச் சிரித்து முப்புரத்தையும் எரித்த வரலாற்றை உட்கொண்டது. இதனால் சிவபெருமானே விசுவரூபி, விசுவகாரணர், விசுவசேவியர், விசுவாந்தரியாமி என்பதை விளக்குவதாகும்.

இங்ஙனமன்றியும் வேறுவேறு விதமான தத்துவம் உணர்த்துவதாகவும் கூறுப. விரிவஞ்சி விடுத்தாம். விரிந்த நூல்களிற் கண்டுகொள்க.

சில சிவாலயங்களில் 10 வது நாள் திரு நடனக்காட்சி நடைபெறுவதுண்டு. திருநடனம் 9 வகைப்படும். அவற்றுள் ஆனந்த தாண்டவம் தில்லையில் கனகசபையில் பதஞ்சலி வியாக்கிரபாதர் காண ஆடியது. அநவரத தாண்டவம் தமருகம், அபயம், அக்கினி, ஊன்றிய திருவடி, தூக்கிய திருவடி இவற்றால் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியம் செய்தருளுவதைக் குறிப்பதாகும். இப்பஞ்சகிருத்தியம் தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என மூவகைப்படும். விரிவைச் சித்தாந்த நூல்களிற் காண்க.

பெருங்கருணைத்தடங்கடலாகிய சிவபெருமான் நாமெல்லாரும் உய்யும்பொருட்டுச் சிவாலயங்களில் திருமேனி கொண்டெழுந்தருளியிருந் தருள்செய்யவும் நாம் அவரை வழிபடாமையும், உண்மை உணராமையும் செய்ந்நன்றி மறத்தலாகிய பெருங் கொடும்பாவமாகும்.

நாம் நாடோறும் அபுத்தி பூர்வமாகச் (குற்றம் என்று தெரியாமல்) செய்யும் பாவங்கள் நித்திய வழிபாட்டினால் தீரும்; நித்திய வழிபாட்டில் நேரும் பாவங்கள் நைமித்திக வழிபாட்டினால் நீரும். ஆகையினால் சிவாலய வழிபாடு செய்து இருமைப் பயனும் ஒருங்கு எய்துவோமாக.

## சிவாலய தரிசனவிதி

சிவாலய தரிசனஞ் செய்ய விரும்புவோர் அகத்தும் புறத்தும் தூயராய்ச், சிவசின்னங்களணிந்து, சிவநாமத்தை உச்சரித்துக்கொண்டு சென்று, தூல லிங்கமாகிய கோபு

ரத்தை வணங்கி நமஸ்கரித்து, உள்ளே சென்று மெல்லப் பிரதக்ஷிணம் செய்து, சந்நிதியில் நமஸ்கரித்துத் துவார பாலகரை வணங்கிப் பின் திருநந்தி தேவரையும் வணங்கிச் சிவபெருமானைத் தரிசிக்க அநுமதிபெற்று உள்ளே சென்று விக்கிநேஸ்வரரை வணங்கிக் குட்டிக்கொண்டு தாழ்ந்து தோத்திரம் பண்ணக்கடவர். பின் சிவசந்நிதியை யடைந்து அஞ்சலி செய்து திருவருட்பாக்களை ஓதி, பின் சபாபதி, தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்பிர மணியர் முதலிய மூர்த்திகளையும் நால்வரையும் வணங்கித் துதிக்கக்கடவர். பின் அம்மை சந்நிதி அடைந்து வணங் கிச், சண்டேசுரர் சந்நிதியடைந்து வணங்கி மூன்றுமுறை கைதட்டிச் சிவதரிசனபலன் தரும்படி பிரார்த்திக்கக் கடவர். அதன்பின் நந்திதேவரை வணங்கி விடைபெற்று வீட்டுக்குச் செல்லக்கடவர்.

சிவாலயத்திற்குச் செல்வோர் தங்கள் தகுதிக்கேற்ப பழம் முதலியன கொண்டு சென்று அருச்சிப்பித்து விபூதிப் பிரசாதம் பெறக்கடவர். ஒன்றும் இயலாதவர் சந்நிதியில் கிடக்கும் செத்தை முதலியவற்றை அப்புறப்படுத்தி இயன்ற தொண்டு செய்யக்கடவர்.

---

# கும்பாபிஷேக மகத்துவம்

கும்பாபிடேகம் பெருவிழா அல்லது பெருஞ்சாந்தி எனப்படும். 'கபாலீச்சரம் அமர்ந்தான் பெருஞ்சாந்தி காணுதே போதியோ பூம்பாவாய்' எனவரும் ஞான சம்பந்தப் பெருமான் திருவாக்கானும் உணர்க. கும்பாபிடேகம் என்பது கும்பத்திலுள்ள நீரினுல் அபிடேகித்தலாம். இனி அதன் முறைமை என்னே எனின்;

**கும்பம் சிவசொருபம்:**— கும்பவஸ்திரம் தோல்; மேல்பூசிய செம்மண் இரத்தம்; கும்பத்துமண் மாமிசம்; உதகம் மேதை; கூர்ச்சம் எலும்பு; மேற்சுற்றிய நூல் நரம்பு; கும்பத்தில் இடும் பொன் பூ முதலியன வீரியம்; நியசிக்கப் பட்ட மந்திரம் உயிர்;] கீழிட்ட நெல் முதலிய தானியம் ஆசனம். கும்பத்தை, முதலில், கோயிலிலுள்ள பிம்பத்தின் சமீபத்தில் வைத்துத் தருப்பை மாவிலை முதலிய கொண்டு மந்திரங்களைச்சொல்லிப் பிம்பத்தில் விளங்கும் மூர்த்தியைக் கும்பத்தில் ஆவாகனம் செய்வார்கள். ஆவாகனமாவது மந்திரங்களைச் சொல்லிக் கும்பத்தில் அபிமுகம் ஆகச்செய்தல். பிறகு அக்கும்பத்தை மங்கள முழக்குடன் யாகசாலைக்கு எழுந்தருளச் செய்வார்கள்.

யாகசாலையானது 36 தத்துவ சொரூபமானதும் சிவபெருமானது அட்டமூர்த்த வடிவமானதும் ஆகும். யாக சாலையில் ஒன்பது குண்டங்களில் ஒன்பது அக்கினி






வளர்க்கப்பெறும்; காரணமாக நாடோறும் ஆகவனீயம் தக்கிணாக்கினியம் காருகபத்தியம் என்னும் மூன்று அக்கினி வளர்க்கப்பெறும் என்பது, 'மூன்றுவகை குறித்த முத்தீச் செல்வத்து' எனவரும் திருமுருகாற்றுப்படை அடிகளானும் உணர்க. அவை நாற்கோணம், முக்கோணம், அர்த்தசந்திர வடிவம் முதலாக ஒன்பது வடிவில் காணப்படும். அவ்வாறு வடிவமைப்பதற்குக் காரணங்கள் உண்டு. குண்டங்களைச் சுற்றி முறுக்கிய பசுந்தர்ப்பைகளைப் பரப்பி ஆல், அரசு முதலிய சமித்துக்களைக் குண்டத்திலிட்டுக் கடைந்தெடுக்கப் பட்ட சுத்தமான அக்கினி கொண்டு அதற்குரிய மந்திரங்களைச் சொல்லி அதிதெய்வங்களை மனதில் தியானித்து சுருக்கு சுருவம் என்னும் கருவிகளைக்கொண்டு நெய் முதலியன சொரிந்து அக்கினி வளர்ப்பார்கள். இங்ஙனம் மந்திரம், கிரியை, பாவனை மூன்றினாலும் வளர்க்கப்படும் அக்கினியிலிருந்து எழும் புகையும், வேதஒலி, சிவாகமஒலி, தமிழ்மறைஒலி, இவற்றுடன் உத்தம மெய்யன்பர்கள் நல்லெண்ணங்களும் எங்கும் வியாபித்திருக்கிற இறைவனது அருட் சத்தியைத் தூண்டிக் கும்பத்தில் பிரகாசிக்கச் செய்யும். அப்போது அக் கும்பம் தெய்வீக சத்திகலைகள் நிரம்பியதாகும். மின்சாரத்தைச் செலுத்தச் செப்புக்கம்பி முதலியனவே தகுதியுடையனவாதல்போலத் தருப்பை நுனி, மாவிலை முதலியனவும் மந்திரங்களுடன் கூடியவழி சிவசத்தியாகிய மின்சாரத்தைச் செலுத்தக்கூடியனவாதலின் அவற்றைக் கைக்கொள்ளுகிறார்கள் என்பதையும் நுண்ணிதின் உணர்ந்துகொள்க.



இவ்வாறு யாகசாலையில் நடைபெறவேண்டிய கிரியைகள் முற்றுப்பெற்றவுடன், மீண்டும் தெய்வீக சத்தி

ஆலயத்திலுள்ள பிம்பத்தினிடமாக அமையவேண்டி, அச் சத்தியைச் செலுத்தும் சத்திவாய்ந்த தருப்பைக் கயிற்றின் வழி அச் சத்தியைப் பிம்பத்தில் சேர்ப்பித்துக் கும்பத்திலுள்ள நீரினல் சிகரங்களிலும் பிம்பத்திலும் அபிடேகம் செய்வார்கள். இதுவே கும்பாபிடேகமாம்.

யாகாக்கினி ஆல், அரசு, புரசு முதலிய சமித்துக் கொண்டு வளர்க்கப்படுவது. நெய், பால், பழம் முதலியனவும் சொரிவார்கள். தைலம் வடிப்பவர்கள் ஒருவகை விறகுகொண்டே காய்ச்சி வடிக்கிருர்கள். வேறுவகை விறகானல் தைலம் குணம்கெடும் என்பது அவர்கள்துணிபு. சூடு ஒன்றுபோல் நமக்குக் காணப்பட்டாலும் விறகுக்குத் தக்க குணந்தருகிறது என்பது தெளிவு. துரியோதனன் ஏவலால் காளமாமுனி ஆபிசார ஓமம் வளர்ப்பதற்கு விஷமூலிகைகளேச் சமித்தாகக்கொண்டார் என்பதும், அதற்குத்தக அக்கினியிலிருந்து பூதம் தோன்றியதென்பதும் பாரதத்துக் கூறப்பட்டது காண்க.

**இனி மந்திரம் பலன்தருவதென்பது:—** விடந் தீண்டப்பெற்ருர் மாந்திரிகன் உச்சரிக்கும் மந்திரத்தால் விடம் தீரப்பெறுவதை நேரிலும் அறிகிருேம்; கேட்டும் அறிகிருேம்; அங்ஙனமே விடத்தைப் போக்கும் அம் மந்திரத்தினும் மேலான பிரம மந்திரங்களும் அங்க மந்திரங்களும் பலன் தருவனவே. சொல்லுக்கும் செயலுக்கும் சத்தி உண்டென்பதுடன் எண்ணத்திற்கும் சத்தி உண்டென விஞ்ஞானிகளும் கூறுவர். ஒருவன் எண்ணும் எண்ணங்கள் உருக்கொண்டு வெளிச்சென்று பின் எண்ணியவனேயே அடைகின்றன என்கின்றனர். ஆகையினல் யாகாக்கினி,

மந்திரம், பரிசுத்தமுடையவர்களது எண்ணம், இவை எல்லாம் எங்கும் நிறைந்துள்ள தெய்வீக சத்தியாகிய மின்சாரத்தைக் கும்பத்தில் செலுத்துகின்றன என்பதும் கும்பத்திலுள்ள நீர் கிரகிக்கின்றது என்பதும் யுத்திக்குப் பொருந்துமாற்றானும் கண்டு சுருதி அனுபவங்களோடு ஒட்டிக்கொள்க.

காலவரையறைக்குட்பட்ட கிறிஸ்தவ, முகம்மதிய மதத்தவர்களும் சில கிரியைகளைச் செய்கிறார்கள். செய்யும் போது தங்கள் நூலிலிருந்து சில வசனங்களைப் படிக்கிறார்கள். இவர்கள் கொண்ட தலைவர்களது பிறப்பு முதலியவைகள் அவர்கள் நூல்களிலேயே பேசப்படுகின்றன. சைவர்கள் செய்யும் கிரியைகள் பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானருளிய சிவாகமங்களில் கூறப்பட்டன. இக் கிரியைகள் எல்லாம் பொருள் குறித்தன. நன்மை பயப்பன. சைவர்கள் தங்களுக்கென்று வேண்டாமல் உலகத்திற்கே நன்மை வேண்டுவர் என்பதும் ஓர்க.

**அஷ்டபந்தனம்:—** ஆலயத்தில் உள்ள பிம்பங்கள் அசைந்தாலும், கீழ்நோக்கினாலும் மேல்நோக்கினாலும் மக்கட்கும் அரசாங்கத்திற்கும் நன்றன்று. ஆதலின் அப் பிம்பங்கள் அசையாமல் நேரேபார்த்திருக்கும்படி, கொம்பரக்கு முதலிய எட்டுப்பொருள்கொண்டு இடித்த மருந்தைப் பீடத்தைச்சுற்றிப் பதியவைத்தலாம்.

**சொர்ணபந்தனம்:—** முன்கூறியபடி நேரேஇருப்பதற்காகத் தங்கச்சுருள்கொண்டு பதியவைத்துக் கெட்டிப்படுத்தலாம்.

மகாபிஷேகம்:— கும்பாபிஷேகம் ஆனவுடன் செய்ய வேண்டிய கிரியை. இறைவனைப் பிம்பத்திலிருந்து கும்பத்திலும் கும்பத்திலிருந்து பிம்பத்திலும் ஆவாகனம் செய்த முறையால் விளைந்த களைப்புத்தீர்வதாகப் பாவித்து, மிகுதியான அபிஷேகத் திரவியங்களால் அபிஷேகித்து, நன்கு பக்குவமான நிவேதனங்களை நிவேதித்து உபசரிப்பதாம். இதனை மகா ஹவிர்நிவேதனம் எனக் கூறுவதுமுண்டு.

மண்டலாபிஷேகம்:— கும்பாபிஷேகத்திற்கு முன் பிம்பத்திற்குக் காப்புநாண் அணிவார்கள். கும்பாபிடேக தினத்திலிருந்து 45 நாள் விசேட அபிஷேக ஆராதனை செய்து 45-வது நாள் காப்புநாண் அகற்றுவார்கள். கிரியை பூர்த்தியாகும்.

## யாகசாலையில் நடைபெறும் சிலகிரியைகளின் விளக்கம்.

அனுக்ஞை:— கும்பாபிஷேகத்தின்பொருட்டு இறைவனிடம் அநுக்கிரகம் பெறுதல்.

விக்னேசுவரபூசை:— கும்பாபிடேகக்கிரியை இடையூறு இன்றி இனிது நிறைவேறும் பொருட்டு விநாயகரை வழிபடுதல்.

ரக்ஷோக்னம்:— நல்லகாரியங்களில் இடையூறு செய்யும் அரக்கர்களை வெருட்டித் திரும்ப அவ்வரக்கர்கள் வராமற் காத்தற்பொருட்டு எட்டுத்திக்கிலும்வைரவர்களையும் நடுவில் இலக்குமியையும் பூசித்தல்.

கிருகமகம்:— நவக்கிரக ஹோமம். சூரியன் முதலிய ஒன்பதுகிரகங்களையும் அசுபதி முதலிய நக்ஷத்திரங்களுடன் அவற்றின் அதிதேவதைகளையும் பூசித்துக் கிரியை நன்கு நிறைவேறும்படி பிரார்த்தித்தல்.

வாஸ்துசாந்தி:— வாஸ்து புருடனை உபாசித்தல். நற் காரியங்கள் நடைபெறும் இடமெல்லாம் அக்காரியத்தைத் தடுக்கும் அவ்வசுரனை அவ்வாறு செய்ய வொட்டாது காக்கும்படி பிர்மா முதலிய தேவர்களை வேண்டுவதுடன் அவ்வாஸ்து புருடனுக்கும் சாந்திசெய்தல்.

மிருத்சங்கிரகணம்:— பாலிகையின் பொருட்டுப் பூமி தேவி சப்தசமுத்திரம் இந்திரன் பிரமாமுதலிய தேவர்களை வழிபட்டு மண்எடுத்தல்.

அங்குரார்ப்பணம்:— பாலிகை தெளித்தல்.

ரக்ஷாபந்தனம்:— ஆசாரியருக்குக் காப்பணிதல்.

கலாகர்ஷணம்:— பிம்பத்திலுள்ள கலையைத் தங்க நூல்வழி ஆகர்ஷித்தல்.

## கும்பாபிடேக பலன்.

உலகத்தில் ஒருவரை ஒருவர் வாழ்த்துகிறபொழுது 'கோயில்கட்டிக் கும்பாபிஷேகம் செய்தபலன் தங்களுக்குக் கிட்டுமாக' என்கின்றனர். இதனல் கும்பாபிஷேகம் செய் வித்தல், துணைபுரிதல், கண்டுகளித்தல் முதலியனவற்றின்

மகத்துவம் நன்கு விளங்குகிறது. வேண்டுவோர் வேண்டுவதே யீவானாகிய இறைவன் கும்பாபிஷேகத்தால் பிரீதியடைவதால் நாட்டிற்கும் அரசாங்கத்திற்கும் நன்மை உண்டு. தரிசித்தவர் இம்மைப் போகங்களேயன்றிச் சிவபோகமாகிய பேரின்பமும் பெற்று வாழ்வார்கள் என்பது சத்தியம்.

## வேளூர் தலப்பெருமை.

ஆலயங்களில் அமைந்துள்ள மூர்த்தங்கள் கருத்து உடையன என்பது மேலே கூறப்பட்டது, ஆயினும் சில ஆலயங்களில் சிலமூர்த்தங்கள் மிகச் சிறப்புடையன, கண் கண்ட தெய்வமாகவும் உள்ளன.

நடராசப்பெருமானது திருவடிவம் எங்குமிருந்தாலும் தில்லையம்பதியில் மிகச்சிறப்பாகப் போற்றப்படுகின்றது. ஆனி மார்கழித் திருவிழாக்களில் திருநடனக்காட்சி காணப் பல்லாயிரவர் கூடுகிறார்கள். அங்ஙனமே செல்வமுத்துக் குமார சுவாமிக்குத்தனிச்சிறப்பு இவ்வேளூரின்கண் உண்டு என்பது உலகமறியும். ஒவ்வொருகார்த்திகைத்திருநாளிலும் பல ஆயிரக்கணக்கான அடியார் தரிசிக்க வருவர். நடுப்பகல் 12 மணிவரையில், ஈரவஸ்திரம் அரையிலேஉலர, யாதொரு உணவும் உட்கொள்ளாமல் இருந்து செல்வமுத்துக்குமார சுவாமிக்கு நடைபெறும்சந்தன அபிஷேகங் கண்டுகளித்துச் சந்தனக்குழம்பு வாங்கி உண்டு மகிழ்ந்தே பிறகு உணவு கொள்வர். காணிக்கையாக மக்கள் தினமும் திருவிழாவிலும் செலுத்தும் பொருள்களும்அளவில்லாதன. மக்கள் சிறப்பாக வினைதீர்த்தான் கோயில் என்றே அழைப்பர்.

சந்தனப்பிடியும் திருச்சாந்துருண்டையும் தீராத நோய்களைத் தீர்த்துவைப்பதை இப்பவும் காணலாம். உடல் நோய் உயிர்நோய் இரண்டையும்தீர்ப்பவர் வைத்தியநாதர்.

மகேசுரமூர்த்தம் இருபத்தைந்தில் சோமாஸ்கந்தமூர்த்தம் ஒன்று. கைலையின்கண் சுவாமி அம்மை இருவருக்கும் நடுவில் குமரன் வீற்றிருக்கும் காட்சியமைந்தது. இங்கும் திருவிழாக்காலங்களில் வைத்தியநாதர் தையனுயகி இருவருக்கும் இடையில் முத்துக்குமாரசுவாமி எழுந்தருளும் தனிச்சிறப்பு வேறுஎங்கும் காணஇயலாது.

இங்குப் பலதீர்த்தங்களும் உள்ளன. அவற்றுள் சித்தாமிர்தத் தீர்த்தம் தனிச்சிறப்புடையது. இன்றும் நியமமாகப் பலர் மூழ்கித் தங்கள் நோய்தீரப் பெறுகிறார்கள். இத்தீர்த்தத்தில் தவளையும் பாம்பும் காணப்படா.

இன்னும் தலத்தின் சிறப்புக்களையும் நேத்திரப்பிடி சந்தனம், திருச்சாந்துருண்டை முதலிய வரலாறும் இத் தலவரலாற்று நூல்களைப் படித்துத் தெரிந்துகொள்க.

## சைவசமயச்சிறப்பு

உலகமுழுவதும் சமயக்கொள்கைகளைப் பரப்பியது. யார் யார் எவ் எவ்வுரு அமைத்து எவ்வெவ்வழிபாடியற்றினும் முழு முதற்கடவுள் ஏற்றருள்வார் என்பது. மற்றைச் சமயக்கொள்கைகளை யிகழாமல் படிமுறையாகக் கொண்டது. உருவம், அருவுருவம், அருவம் மூன்றையுங்கடந்த

பேரின்பவடிவே இறைவன் வடிவெனக்கண்டது. இறைவன் திருவடியடையச் சாதி பிரதானமன்று அன்பே பிரதானம் என்பது. சரியை, கிரியை, யோகம் ஞானம் என்னும் படி முறைகளைக்கொண்டது. தத்துவம் முப்பத்தாறினையும் அறிந்தது. பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளின் இயல் பினைப் பிரமாணத்தோடு விளக்குவது. கேவலம், சகலம், சுத்தம் ஆகிய மூவகை நிலையினையும் ஆன்மாக்கள் அவ்வந் நிலையில் நிற்கும் நிலையினையும் விளக்குவது. மற்றைச் சமயத் தவர்கள் நூல்கள் மக்களாற் செய்யப்பட்டனவாக இறைவன் இயற்றிய முதனூல்களையே பிரமாணமாகக் கொண்டது. ஆண், பெண், வடிவங்களேயன்றி இரண்டுங்கலந்த அர்த்த நாரீச்சுரவடிவங்கொண்டது. மற்றைச் சமயக்கடவுள் இறந்த பிறந்தகதை அவர்கள் நூல்களில் கேட்கப்படுவது போல் சைவசமய நூல்களில் கூறப்படாமை.

பொதுவாக, முற்பிறவிகளிற்செய்த வினைக்கீடாகப் பிறந்து இறந்து உழல்கின்ற ஆன்மாக்கள் அப்பிறவியாகிய கடலைக் கடத்தற்குத் தெப்பமாகக் கொள்ளத்தக்க இறை வன் திருவடியாகிய புணையைஅநுபவமுறையில்பெறுதற்குப் பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என்னும் பிரமாணங் களால் சந்தேக விபரீதமற விளக்குவது. முடிவாகக் கொல்லாவிரதம் குவலயம் எல்லாம் ஓங்கவும், எல்லாரும் இன்புற்றிருக்கவும் நினைப்பது சைவசமயம்.

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்றால் ஆன்மாக்கள் பிறவிப் பெருங்கடல் கடக்க விரும்பின் இறைவன் திருவடி சேர்தல்

வேண்டும் என்பதூஉம், அவ்விறைவன் சிவபெருமானே என்பதூஉம், திருவடி சேர்தற்கு முதற்படி ஆலயவழிபாடு என்பதூஉம், ஆலயங்களில் தயிரில் நெய்போல விளங்கித் தோன்றுவார் என்பதூஉம், ஆலய அமைப்பு இத்தன்மையது என்பதூஉம், ஆலயங்களில் நடைபெறும் நித்தியபூசை, நைமித்திகபூசை (திருவிழா), கும்பாபிடேகம் (பெருஞ் சாந்தி) எல்லாம் பொருள் குறித்தனவே என்பதூஉம், அவற்றைச் செய்தலும், செய்வித்தலும், கண்டுவணங்கு தலும் உயிர்கள் போகம் மோக்ஷம் இரண்டும் பெறுதற்குச் சாதனங்கள் என்பதூஉம், ஒருவாறு சுருக்கிக்கூறப்பட்டன.

சைவசமயத்தவர்களால் செய்யப்படும் இக் கும்பா பிஷேகம் முதலியன சைவர்கள் நன்மையின் பொருட்டு என்பதுமாத்திரம் அன்றி குடிகள் அரசாங்கம் உலகம் க்ஷேமங்கருதியே செய்யப்படுவனவாகும்.

சைவத்தின் மேற்சமயம் வேறில்லை எனவும், சைவ சமயமே சமயம் எனவும் போற்றப்பெற்ற சைவமாம் சமயம் சாரும் ஊழினைப்பெற்ற மெய்யன்பர்களே! ஈசுர பத்தியும் நல்லொழுக்கமு முள்ள பிதாமாதாக்களை யுடைமையே பெரும் பாக்கியம் என்பது நீதிவாக்கியமாதலின் உங்கள் சந்ததியாருக்கும் வழிவழியாக அழியாத செல்வத்தைச் சேர்த்துவைக்க விரும்புவீர்களாயின் சிவ சின்னங்களாகிய விபூதி உருத்திராக்கம் தரித்து நாடோறும் நியமமாக ஆலய வழிபாடு செய்வதோடு திருவிழாப் பெருவிழாக் காலங்களி லும் சென்று தரிசித்துப் பேரானந்தப் பெருவாழ்வெய்து வீர்களாக.

---

பின் சேர்க்கை.

## ஐவகை சுத்தி

பூசை, ஆன்மார்த்தபூசை எனவும் பரார்த்தபூசை எனவும் இரண்டுவகைப்படும். ஆன்மார்த்தமாவது சிவ தீக்ஷை செய்யுங் காலத்தில் ஆசாரியனுல் கொடுக்கப்பட்ட இலிங்க முதலியவைகளைப் பூஜித்தல். பரார்த்தமாவது உலகினர் வழிபட் டுய்வதற்காகத் தேவர்கள் இருஷிகள் அரசர் முதலியவர்களால் தாபிக்கப்பட்ட ஆலயங்களில் பூஜிப்பது. ஆன்மார்த்தத்திற்கும், பரார்த்தத்திற்கும் பூஜை முறைகளில் அதிக வித்தியாசம் இல்லையேனும், பரார்த்தபூஜையில் ஆவரணபூஜை, உபசாரங்கள், தீபாராதனை, உற்சவம், பிராயச்சித்தம் முதலியவைகள் அதிகமாக விதிக்கப்பட்டிருக்கின்றன. ஈண்டு பூஜையைப்பற்றி மாத்திரம் கவனிப்போம்.

ஆகமங்களின் பேதத்தினுல் சில ஆலயங்களில் சிற்சில ஆசார அநுஷ்டானங்கள் மாறுபட்டபோதிலும், பிரதானமாக பஞ்சசுத்தி, பூஜை, நைவேத்யம், தீபாராதனை முதலின ஒன்றுபோலவே காணப்படும்.

பஞ்சசுத்தியாவது ஆன்மசுத்தி, ஸ்தான சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்பனவாம். பஞ்சசுத்திசெய்த பிறகுதான் சிவபெருமானைப் பூஜிக்க வேண்டும் என்பது ஆகமங்களின் கட்டளை.

முதலாவதான ஆன்ம சுத்தியானது பூதசுத்தி, அந்தரியாகம், சமாதி என்பனவற்றின் தொகுதியாகும். பூதசுத்தி என்பது சரீரங்கட்குக் காரணமான ஐவகைப் பூதங்களையும் சுத்தி செய்தலாகும். இதில் சூட்சும சரீரசுத்தி, தூலசரீர சுத்தி என இரண்டு பகுதிகள் உண்டு. சரீரத்தைச் சுத்தி செய்வதற்காக அதனோடு சம்பந்தப்பட்டுள்ள ஆன்மாவைப் பிராணயாமத்தினல், த்வாத சாந்தத்தில் இருக்கும் சிவ பெருமானிடத்தில் சேர்ப்பித்து, தத்துவங்களை மகா மாயையிலும், புரியஷ்டங்களை - சூக்கும சரீரங்களை (சப்த பரிச ரூப ரச கந்த மனம் புத்தி அகங்காரம்)பிரமா முதல் சிவமீருக வுள்ள மூர்த்திகளிலும் ஒடுங்கின தாகப்பாவித்தல் சூட்சும தேக சுத்தியாகும். நிவிருத்தி முதலியவைகளின் பீஜாக்ஷரங்களை உச்சரித்து அவைகளின் வலிகெடச் செய்து, தன் சரீரத்தை ஊர்த்துவ மூலமான (மேலே வேரும், கீழே கிளைகளுமுள்ள) ஆமைரமாகப் பாவித்து, அதனைத் தனது வலக்கால் பெரு விரலிலிருந்து உண்டான அக்கினியினல் தகித்து, திருவருட் சத்தியாகிய அமிர்தத்தினல் நனைத்துச் சுத்தமானதாகப் பாவித்தல் ஸ்தூல தேக சுத்தியாகும். இதனுண்மை பிருதிவி முதலிய தத்துவங்கள் ஜடங்களான படியால் அவைகள் தாமாகக் காரியப்படமாட்டாவெனக் கண்டு அவைகளினின்றும் நீங்கும் பாவனையாம்.

அந்தரியாகம்: வெளியே செய்யும் முறைபோலவே இருதய கமலத்தில் சிவபெருமானைப் பூஜித்துப் பூஜையின் பலனை அவரிடத்தே ஒப்புவித்தலாகும்.

சமாதி: அகண்டாகாரமான சிவபெருமானை விந்து தானத்தில் தீப ஜ்வாலை போன்றவராய்த் தியானித்துப் புறப்பூஜைக்கு அநுமதி பெறுதல்.

**ஸ்நான சுத்தி:** அசுரர்கள் உட்பிரவேசியாதிருப்பதற்காக அஸ்திர மந்திரத்தினுல் திக்பந்தனம் செய்வதால் பூஜை செய்யுமிடத்தைச் சுற்றி நாற்புறமும் அக்கினி வடிவாகிய மதிலும், கவச மந்திரத்தை உச்சரித்து அவகுண்டனம் செய்வதால் மூன்றகழும், சக்தி மந்திரத்தைச் சொல்லி தேனுமுத்திரை காட்டுவதால் திருவருட் சத்தியாகிய வலை மேலும் கீழும் உண்டானதாகப் பாவித்தல். அதனுண்மை, பூஜாஸ்தானத்தைச் சிவனுறைகின்ற சிவதத்துவமாக்குதல்.

**திரவிய சுத்தி:** புஷ்பம் முதலிய பூஜா திரவியங்களை நிரீக்ஷணம் (பார்த்தல்) முதலிய ஸம்ஸ்காரங்களினுல் சுத்தி செய்தல்.

இதன் தத்துவமாவது திரவியங்கள்யாவும் மாயையினிடத்திருந்து தோன்றி மாயாசம்பந்தம் பெற்றிருப்பதால் சுத்தனுகிய சிவபெருமானுக்கு அவை உரியனவாகா வாதலால், நிரீக்ஷண (சிவமந்திரத்தைச் சொல்லிக்கொண்டு பார்த்தல் முதலியன) திகளினுல் சிவசக்தியை அதிற் பதியும்படி செய்யின் அவை சுத்தமாகி, சிவபெருமானுக் குகந்தனவாகும். அதாவது, பூஜாத்திரவியங்களும் சிவபெருமானுடைய எண்வகைச் சரீரங்களுள் அடங்கினவை என்றறிவதாம்.

**மந்திரசுத்தி:** தன்னுடைய ஆஸனத்திலே சிவாஸனத்தையும், தன் இருதயத்திலே சிவமூர்த்தியையும் பூஜித்துத் தன்னைச் சிவரூபமாகப் பாவித்துக்கொண்டு மந்திரங்களை ஹ்ரச்வ தீர்க்க ப்லுதக் கிரமமாக உச்சரித்தலாகும்.

இதனுண்மையாதெனின், பஞ்சாக்ஷரத்தைச் சாதாரண ஐந்தெழுத்தாகக் கொள்ளலாம். சிவ்விலே சிவமும், வவ்விலே திருவருட்சக்தியும், யவ்விலே ஆன்மாவும், நவ்விலே திரோதானசக்தியும், மவ்விலே மலமும் ஆகிய ஐந்து முதலையுடையதாகக் காண்பதாகும்.

இலிங்கசுத்தி: சிவலிங்கத்தின்மீது இருந்த நிருமாலியங்களைக் களைந்து இலிங்கத்தையும் பீடத்தையும் அர்க்கிய ஜலத்தினாலபிஷேகித்தல். சித்பிரபஞ்சம், அசித்பிரபஞ்சம் என்னும் இரண்டினும் பிரிவறச் சேஷ்டித்து நிற்கும் சிவபெருமான் இலிங்கத்திடத்தேயும் இருக்கின்றார் என்றுணர்தலே இலிங்கசுத்தியின் உண்மையாகும்.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்."

செல்வமுத்துக்குமாரன் திருவடிகளே சரணம்.

---

# தோத்திரங்கள்

## விநாயகர்

பிடியதன் உரு உமைகொள மிகுகரியது
வடிகொடு தனதடி வழிபடுமவர் இடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே.

—சம்பந்தர்.

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் — உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்-விநாயகனே
விண்ணிற்குமண்ணிற்குநாதனுமாநதன்மையினல்
கண்ணில் பணிமின் கனிந்து.

—பதினொராந் திருமுறை.

எடுக்கு மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கு அருள்செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்களிற்றைக் கருத்துள் இருத்துவாம்.

—சேக்கிழார்.

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமது உள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

—விருத்தாசல புராணம்.

## சுப்பிரமணியர்

முன்னையார் மயில் ஊர்தி முருகவேள்
தன்னை யாரெனில் தான் ஓர் தலைமகன்
என்னை ஆளும் இறையவன் எம்பிரான்
பின்னை யாரவர் பேரெயிலாளரே.

—அப்பர்.

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னைஒருவரையான்பின்செல்லேன்
—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ்வே.

—பதினொராந்திருமுறை.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

—கந்தரனுபூதி.

## சிவபெருமான்

கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே.

—சம்பந்தர்.

உள்ள முள்கி யுகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக் குவேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே.

—அப்பர்.

பால்நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யான்உனைத்தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்தருளுவது இனியே.

—மணிவாசகர்.

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவரறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்

செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளங்
குளிர வென்கண்குளிர்ந் தனவே.

—திருவிசைப்பா.

பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப்
பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன்
மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்
பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயில வல்லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

—திருப்பல்லாண்டு.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

—பெரியபுராணம்

சொல்லுவதறியேன் வாழி
தோற்றிய தோற்றம்போற்றி
வல்லைவந்தருளி என்னை
வழித்தொண்டு கொண்டாய் போற்றி

எல்லையில் இன்ப வெள்ளம்
　　எனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடும்
　　சேவடிபோற்றி என்ன.

—பெரியபுராணம்.

## உமாதேவி

பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே பின் கரந்தவளே கறைக்கண்டனுக்கு
மூத்தவளே என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே
மாத்தவளே உன்னையன்றி மற்றோர் தெய்வம்
　　வந்திப்பதே.

தனம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வுஅறியா
மனம்தரும் தெய்வவடிவும் தரும் நெஞ்சில்
　　வஞ்சமில்லா
இனம்தரும் நல்லனஎல்லாம் தரும் அன்பர்
　　என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமிகடைக்கண்களே.

—அபிராமியந்தாதி.

## சண்டேசுரர்

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த
　　புனிதற் கமைக்கும் பொருளன்றி
மின்னுங்கல னுடைகள் பிறவும்
　　வேறு தனக்கென் றமையாமே

மன்னுந் தலைவன் பூசனையின்
மல்கும் பயனை யடியார்கள்
துன்னும் படிபூ சனைகொள்ளுந்
தூயோ னடித்தா மரைதொழுவாம்.

—திருவானைக்கா புராணம்.

## நடராச சதகம்

### அட்டபந்தன நிறை கூறியது

கொம்பரக் கொருபங்கு திரிபங்க தேகருங்
குங்குலிய மூன்றுசுக்கான்
கொண்டமுக் காற்பங்கு காவிக்கல் வெண்மெழுகு
கூறுநவ நீதமூன்று
செம்பஞ்ச தத்தொகை யிலிங்கமே காற்பங்கு
சேர்த்திடித் திளமெழுகுபோற்
செய்வதுய ரட்டபந் தனவிதிய தென்றுமறை
செப்பினை யிலிங்கமாதி
விம்பபீ டத்தணிந் துயர்சம்பு ரோட்சணம்
வியன்பொழுதி லபிடேகமா
விதிசெய வமைத்தனைகொ லதுபெயர்ந் திடில்ரசு
வியனிராச் சியவிநாசம்
செம்பதும வல்லிதன தம்புயகல் வீடெனத்
தினமுமக லாதுவாழுஞ்
சிவசிதம் பரவாச சிவகாமி யுமைநேச
செகதீச நடராசனே.

## நமஸ்கார விதி

சிரமட்டு மேவணங் கிடுதலே காங்கமச்
சிரமிசையோர் கைபொருந்தச்
செய்தறு விதாங்கமா மிருகரங் கூப்பியே
சென்னிமிசை வைத்திடுகையே
யுரியமூன் றங்கமிரு கையிணை முழந்தா
ளூறுஞ்சிரமொ டதங்கமைந்
தோங்குசிர மிருகர மிணைச்செவி முழந்தா
ளுயர்ந்தமார் பிவைபூமியிற்
பரிசமுற வேபணித லட்டாங்க நம்முனது
பஞ்சமுறை பணிதல்வேண்டும்
பத்தியுடன் மூன்றுவிசை குருமுன்னர் மற்றையப்
பரிசனர்க் கொன்றதேனும்
திருவுள மகிழ்ந்தேக சித்தமொடு வந்தனை
செயத்தக்க தெனவுரைத்தாய்
சிவசிதம் பரவாச சிவகாமி யுமைநேச
செகதீச நடராசனே.





வைத்தீசுவரன்கோயில் — ஸித்தாமிர்தத்தீர்த்தம்